சிந்தையுறவுதித்தபதி னைந்துநாழிகையின்மேல்
செப்புவேன்பதினெட்டு மூன்றேமுக்கால்
வந்தநாழிகையளவி லெந்தலக்கினமோ
வகுத்துப்பாரதிலேயெம கண்டனிருப்பானே. (௧௨௫)

இருப்பானேமுன்சொன்ன வகைகளைப்போலே
யென்மகனேதேதிபார்த்துச் சொல்லுநீயே
வொருப்பானேஐய ருதித்தபதினோர்கால்நாழி
மேல்மூன்றேமுக்காலாகப் பதினைந்துக்குள்
விரிப்பானேன்வரும் லக்கினத்தில்பாரு
விடத்திருப்பானதிலந்தப் பிரகாரந்தான்
மருப்பானேநாயருக்குதித்து
வரும்விருபத்தாறேகால் நாழிகையிதின்மேல். (௧௨௬)

மேலென்னமூன்றே முக்காலாகமுப்பதுநாழியில்
மேவிவரும்லக்கினத்தில் காலனுதிப்பான்காண்
மாலென்னயிதற்கெல்லா மவரவிருக்கும்
லக்கினத்துக்கேற்ற லக்கினமேவருதே
ஆலென்னவந்தலக்கினத்தி விரவினிலே
அப்பனேகுளிகனைப்போ லேவருமிருப்பார்
காலென்னஆகவேமூ வாரத்துக்கும்
கண்டுகொள்ளிவர்களிருப் பிடத்தைத்தானே. (௧௨௭)

தானென்றமேஷமுதல் மீனமீருய்
தான்சென்றநாழிகையும் பார்த்துக்கொள்ளு
மானென்றவந்தந்த மாதத்துக்கு
மைந்தனேவிசேஷமாய் சித்திரைக்கியொன்றும்
கோனென்றுகூட்டவே தேவையில்லை
கூறும்வையாசிமுதல் யெத்தனையாந்தேதி
ஆனென்றுவைக்கவேணுமோ வந்தத்தேதி
அமர்த்திக்கீழ்சென்ற மாதத்தைக்கூட்டே. (கஉஅ)

## தூமாதி கிரகசாரம்.

கூட்டியதுவுடனேயும நாலுகூட்டி
குணமாகக்கிழ்த்தேதி பதிமூன்றுங்கூட்டிமேலே
பேட்டியெத்தனைராசி போகக்கீழே
பிறந்துவந்தராசியினில் தூமனிருந்திடுவான்
ஓட்டியந்தக்கெதியிலே முப்பதானல்
ஓகோகோராசியேத்திப் பார்த்துச்சொல்லு
ஆட்டியெத்தனைராசி கண்டதுவோவதனை
அப்பனேகழித்துநின்ற ராசிதனையேத்தி. (கஉகூ)

ஏத்தியெத்தனைகண்டுதோ அதிலோராசி
யெடுக்கிலதுமுப்பதா யிருக்குங்கீழே
போத்தியெத்தனைத்திதி யிருந்ததோவந்ததேதி
புகழுடனேமுப்பதிலே தள்ளிப்போட்டு

மாத்திநின்றதேதியை வைக்கமேலே
வகையுடனேயெத்தனைராசி போச்சோவத்தை
பார்த்துநீக்கிகீழெத்தனை தேதியிருந்ததுவே
பகரந்தராசியினில் பாகனிருப்பானே. (கருயி)

இருப்பானேமேல்ராசி யோடேகூட
எத்தனைராசிகண்டுதோ வதைநீக்கிவிட்டு
பொருப்பாகக்கீழ்நின்ற ராசிசரபனிருப்பான்
புகழ்கீழ்த்தேதியினிலே பதினேழுகூட
வெருப்பானேன்முப்பது கண்டாலோராசியேத்தி
விட்டுக்கீழேநின்றராசியில் சசியிருப்பான்
மருப்பானேனிப்படி யுபக்கிரகங்கள்தனையெண்ண
மாசந்துக்குமிந்தப்படி வருகுங்காணே. (கருக)

காணப்பா ஆண்டொன்றுக்கு முன்னூற்றறுபத்தைந்து
கருதியநாளுக்குமாதம் பனிரெண்டுக்கும்
தோணப்பாவந்தந்தத் தகுதியிலேயெண்ணி
சொல்லயிந்தப்படியேதா னிருப்பார்களையா
வீணப்பாயெண்ணாதே யுபக்கிரகங்கள்
விபரம்வெளியாகயவனா யின்னொனக்காட்டக்கேளு
ஆணப்பாசனிதன்மகன் குளிகனுக்கும்
அப்பனேவியாழன்மைந்தன் பருதியெமகண்டனே. ( )

எமகண்டன்புதன்மைந்தன் பாகன்பிரகாரன்
என்னசொல்வேனிராகுமகன் காலனாகும்
நிமையில்மடி தூமன்செவ்வாய் மைந்தனாகும்
நிலையாகுஞ்சுரர்குருமைந்தன் சாயனாகும்
அமையுஞ்சசியேத்து மதன்பாக்கன்மூவர்
அனல்கதிரோன் மைந்தரென வறிவாய்நீயே
தமக்குநிகரில்லாத வேதகனுமப்பா
சந்திரனிடமகனெனவே சாற்றுவாரே. (௧௩௩)

## சயனராகுபலன்.

சாத்தவேமுந்திசொன்ன நிறியாணங்கேள்
தான்மகாராசிமுதல் ரெண்டரைநாழிவீதம்
கூத்தவேசயனராகு விருப்பானையா
குறிசொல்லக்கேள் மகரந்தனிலுதித்து
ஏத்தவேயிரண்டரைநாழி கண்களிலேயிருப்பான்
யியல்குடம்ரெண்டரைநாழி வாக்கிலேயிருப்பான்
மாத்தவேமீனத்தில் ரெண்டரைநாழியளவும்
வந்திருப்பான்திருமுகத்தில் வணங்கிக்கேளே. (௧௩௪)

வணங்கியேமேஷத்தி லிரண்டரைநாழிகையே
வயத்திருப்பன் ரிஷபத்தில் ரெண்டரைநாழிகையே
இணங்கியேநாபி லிருப்பான்மிதுனத்தில்
யிரண்டரைநாழிகையில் வாலினிலிருப்பான்

மணங்கியேமைமற்றவாறு ராசிதனைக்கேரு
வாராகமுன்போலே கண்டுகொள்வாய்
அணங்கியேயிவ்விதம்நாற் சாமத்துக்கும்
அப்பனேயிருப்பார்கள் சென்றநாழிகைக்கே. (௧௩௫)

நாழிகைராத்திரிக்கும் பகலுக்குமுறையாதி
ராசிக்கிரண்டரைநாழிகையின்விழுக்காடு
தேழிதிலேகண்டுதெளி மூன்றுநாழிக்கும்
தெனமானயேழரைநாழிகையின்விழுக்காடு
மாழியாறுராசிபதி னைந்துநாழியளவாய்
மன்னிராசிபனிரெண்டு முப்பதுநாழிகையாய்
நீழிருக்குமிந்தபடி யிரவும்பகலும்
நீயறிவாய்நிறியாண மதின்கிரமப்படியே. (௧௩௬)

நிரியாணமறிய.

படியந்தசாதகத்துக் கேழுக்குடையவனும்
பாகனுடனேயோனிக் கொடியகரும்பாம்பும்
முடியந்தசெனனதி யெத்தனையாம்வயதில்
முடிகிவருகின்றனனோ அக்காலமறிந்து
நொடியந்தத்திசையிலவன் பொசிப்பவன்மாதத்தில்
நோக்குமவன்வாரத்தி லவன்நட்சத்திரத்தில்
மடியந்தசாதகனுக் கப்போதுமரணம்
மைந்தனேயமரபட்ச மூயிர்க்கொன்பதோனுடனே. (௧௩௭

ஒன்பதோனுடனே வேந்தனுமேகூடி
உருவிகன்ருகுவுங்கூடி லவன்றன்றிசையில்
முன்புசொன்னபடியே பிதாவுக்குமரணமதாம்
முறையுடனோராசிக்கு நாலோனேடே
வம்புடனேபோதகனுங் கூடிவாலினிலே
வந்தராகுவுங்கூடி லவன்றிசையிலேயா
துன்பமுடன்மாதாவுக்கு மரணமாகுஞ்
சொல்லுயிர்க்குமூன்றுங் குடையவனேடே தூமன். கரு-அ

தூமன்கூடினிலதர்க்கு மூன்ருமிடத்தோனுஞ்
சேர்ந்திடவேகூடில் செனனதிவரும்போது
தீமனவன்றிசையில் சகோதரர்க்குமரணமதாம்
செப்புமுயிர்தனக்கு மூன்றோனுடனேயையா
வீமனெனுங்கேதுவும் பருதியனுங்கூடி
விளங்குஞ்செனனதியெப்போ வருகுதோ அந்தத்தருணம்
ஆமனவியாளுக்கு அப்போதுமரணம்
அவர்களுடன்பின்னுஞ் சரபனுங்கூடிலேயா. (கரு-சு)

கூடிலந்தமனேவியுடன் கூடப்பிறந்தோர்க்கு
குடிகேடுமரணம்வரு மல்லதுவர்க்கத்தில்
வாடிநெறியானுவமே யின்னமுமோர்விந்தை
வளருயிருக்கொன்பதா மிடத்துக்குயிரோனும்

நாடிராசிக்குடையோ னிரண்டுபேர்லக்கினத்துக்கே
நாலிலிருக்கவவன் சரபத்துக்கு
ஓடிவருமரணங்கெற்ப முடனேயையா
உயிர்க்குவைந்தாமிடத்தோனு மேழாமிடத்தோனும். ( )

ஏழாமிடத்தோனும்நாபி ராகுவுமேகூடில்
என்சொல்வேன்செனனுதி யவன்றிசையிலேயா
தாழவுடன்றுயாதிவர்க்கத்தினில்மரணம்
சாத்தராசிக்கொன்பதா மிடத்தோனேயையா
வாழுங்கண்ணிலிருக்கும் ராகுவுமேகூடில்
மைந்தனேயத்திசையில் குருவுக்குமரணம்
நீழும்லக்கினத்துக்கு யெந்தராசியினிலே
நிலைக்கின்றுனேகுளிக னதற்கைந்தெட்டினிலே. (கசக)

எட்டினிலேயொன்பதிலே சனியும்வருங்காலம்
என்னசொல்வேன்மாதாபிதா சாதகன்மற்றவர்க்கும்
தட்டினேனிதர்க்குமன்னிய சுத்தத்தார்க்குங்கேளு
தலபேதந்தனதான்னிய சேதமாகும்
நெட்டிலேராச கலகமப்பா
நிலைக்குமிதுமுதலானதெல்லாம் பார்த்துரைப்பாய்
மட்டுமொருராசிலிரண் டரையாண்டளவும்
வந்திருப்பான்சனியெனவே யின்னங்கேளே. (கசஉ)

இன்னங்கேளதையறிந்து வுயிர்க்குயெமகண்டன்
எந்தராசியிலிருக்கிறானோ வதற்கொன்பதிலே
பின்னங்கேள்வியாழன் வருங்காலம்
புத்திரற்குச்சாமான்னிய துன்பமாகும்
அன்னியமல்லவியாழமகன் யெமகண்டன்றானும்
அந்தரெண்டரையாண்டுக்கு ளோராண்டிருப்பன்
என்னுங்கேளிதற்குள்ளே உயிர்க்கந்தப்பிரகாரன்
யெழுந்துவந்தராசியிலிருக் கின்றனனோவந்த. (௧௪௩)

அந்தராசிக்குவைந்து வொன்பதிலேசூரியன்
அணுகுங்காலத்தில் பிதாவுக்குமரணமதாம்
சிந்தையுறவவனிருப்ப தொருமாதமாகும்
தெரிந்நிந்தத்திங்கட்கு ளுயிர்க்குக்காலன்
எந்தவிடமிருக்கிறனோ வதற்கொன்பதிலே
யெழிற்சோமன்வருங்காலம் நிறியாணமாகும்
சந்திரனோர்ராசியி லிரண்டேகால்நாளிருப்பன்
சாத்தவேகுளிகனுக்கு யிரண்டரையாண்டிருப்பான். ( )

இருப்பாமேகண்டனுக்கு வோர்வருடமாகும்
யிதற்குள்ளேகாலனுக் கிரண்டேகால்நாளாம்
குரிப்பரிந்துயிவ்வித மென்னைப்போலே
கூறினவரில்லையையா ராமதேவர்பத்தில்

நெரிப்புடனேசொன்னதுவுங் கண்டுதெளிநீயே
நீணிலத்திலுன்னையெல்லப் போகாதையா
பொருப்பின்மேலிட்டவிளக் காகுமிதுவையா
புகல்விதென்னப்பூர்வபலன் குறிக்கக்கேளே. (கசரு)

## பூர்வபலன்.

குறிகேளாயுயிர்மூன்றி லிரண்டிலேழில்
கூறுடனே தூமனின்று லவன்றிசையில்பொசிப்பில்
மறிகேளாய்சகோதரற்குத் தாபசுரசிலந்தி
மைந்தனேரணமுங்கண்டு வுடனேதீரும்
நெறிகேளாயுயிர்க்குநாலா மிடத்துக்கேழில்
நீகேளாயல்லது ரெண்டாமிடத்தில்
விறிகேளாய்பாகனிருந் தாக்காலையா
மேலிவன்றிசையி லவன்பொசிப்பில். (கசசு)

பொசிப்பினிலேதாய்வர்க்கந் தாயோடேகூட
பிறந்தவற்குவாதசுரம் வயற்றுவலிகுன்மம்
முசிப்பிலேகாணுமையா வுயிருக்கொன்பதுக்கு
முடிகியேயேழில்ரெண்டில் பருதியிருந்தாக்கால்
வசிப்பிலேபிதாவுடனே கூடப்பிறந்தோர்க்கு
வருபயித்தியதலைவலியும் சுரமுமிதுமுதலாய்
நிசிப்பிலேகாணுமின்ன முயிர்க்கேழாமதற்கு
நிலைத்தவேழில்ரெண்டினிலே சரபனிருந்தாக்கால். (கசஎ

இருந்தாக்கால்பெண்சாதி கூடப்பிறந்தோர்க்கு
மென்னசொல்வேன்வயர்க்கழிச்சல் கடுப்புவந்துதீரு
மிருந்தாக்காலுயிர்க்குரெண்டா மிடமேழாமிடத்தில்
மேவிசசியிருந்தாலவன் றிசையிலவன்பொசிப்பில்
சரிந்தாக்கால்சாதகத்தோன் முகத்தினிலேயீன
சாதிகள்ளனல்வாளின் கண்டம்வந்துதீரும்
பருந்தாக்காலுயிர்க்காரி லேழில்ரெண்டில்
பாகனிருந்தாலவன் றிசையிலவன்பொசிப்பில்.      (௧௪௫)

அவனாலேதாயாதி சனங்களுக்கும்
அப்பனேதிரோஷங்களொடு வெட்டுகுத்துசூன்னியம்
பவனாலேவஞ்சனைகள் நடக்குமையா
பகரவுயிர்நாலினிலே குளிகனுவதுகேள்
உவமானகேதுவாவது மிருந்தால்
ஓகோகோபிறந்தவீடுவிட்டு அசல்வீட்டில்
நவமாகவுயர்ந்த வுப்பரிகைவீட்டிலேறி
நல்லபாக்கியனாக வாழ்வனவன்றிசையில்.      (௧௪௬)

திசையிலவன்பொசிப்பில்வரும் பலனைக்கேளு
செங்கதிரோனுக்குக்கிழக்கே பலனதாகும்
விசையுடனேபுகர்க்கு அக்கினிமூலைபலமாம்
வேதாந்தசந்திரனுக்கு வாய்வுமூலைபலமாம்

பிசகிலாபுதனுக்கு வடக்கேபலனாகும்
பிரபலமுள்ளகுருவுக் கீசான்னியபலமாம்
அசடில்லாயிவ்விதமாக அவரவர்கள்கொடுக்கும்
அரியதோர்பலாபலன்க ளறிந்துசொல்லே. (௧௫௰)

சொல்லவென்றாலெளிதாச்சோ லவரவர்சாதனேக்குச்
சென்றுதிகாலமுமவ் வேளேயோடுராசிகளும்
நல்லதொருபாகையுங் கிரகங்கள்வீற்றிருந்த
நவில்பாகமாட்சிவுச்சப் பகைநீச்சனுடனே
வெல்லுதிசாசக்கரமும் பொசிப்புமுபக்கிரகம்
விளங்குலாபப்பலன் சுபக்கிரகபலாபலனும்
கொல்லும்பாபக்கிரகபலங் களுமேபார்த்து
குறிப்புடனேநன்றாயாராய்ந்துசொல்லே. (௧௫௧)

ஆராய்ந்துயிவ்விதமா யாதித்தன்முதலாய்
அப்பனேநவக்கிரகங்களேயுங் குளிகனேயுந்
சிராய்ந்துவுபக்கிரகங் களேயும்பார்த்து
திறமுடனேகிரகஸ்திரஞ் செய்வாயாகில்
பேராய்ந்தசோதிடவல் லவனீயாகும்
பெருமையுடனாராய்ந்து சொல்லசோம்பிடுகல்
வீராய்ந்தவென்சொல்வி ஞைகப்போகும்
விளம்புவேன் [illegible] பலனேக்கேளே. (௧௫௨)

## கிரகபலாபலன்.

கேளப்பாலக்கினத்தில் குருநிற்கில்
கெடிதிதுரவர்க்கோனாய் சர்ப்பபிரியோனாய்
நீளப்பாயெசமானாய் திரவிபலாபனுமாய்
நீளுடலில்வியாதிவந்தால் தீராதவனுமாய்
கேளப்பா அற்பாயு சுள்ளோனே.
கொடியதொருகேதுநின்றால் மனக்கிலேசனுமாய்
ஆளப்பாயேழையுமாய்க் கெருவிவைராக்கிய
அசடனுமாயிருப்பனேயா வப்புறமேகேளோ. (௧௫௩)

அப்புறமேரெண்டினிலே ராகுநின்றால்
அரியதிரவியவானாய் வாயோகொண்டையுமாய்
மெய்ப்பவேகூனுமுள்ளோனாயிருப்பான்
மேலானகேதுநின்றால் பெலவானுமாகி
சொற்பெறவேபுத்தியுடையோனுமாகி
சொல்வாய்சாலக்கனுமாய் கீர்த்திவானாய்
நற்படியேசுனனுமாய் சூரனாய்ப்பின்செல்வம்
நாடிமனனகவே யீற்றிருப்பான்மூன்றினிலே. (௧௫௪)

மூன்றினிலேராகுநிற்கில் தீர்க்காயுசுள்ளவனாய்
மூர்க்கமிகுகீர்த்தியுமாய் ஸ்திரீயொழுக்கமானாய்
ஆன்றினமாய்த்தன்னைப் புகழ்ப்போனாயும
அப்பனேதனவானாய் கீர்த்தியில்லாதோனாய்

யின்றினிலேகேதுநின்றால் சகோதரரில்லானாய்
இணையிலாபராக்கிரம முன்னோனவனே
தோன்றினிலேசந்திரனிட பலத்தைக்கேளு
சொல்லுவேனன்றாகச் சொல்லுவேனே. (கருரு)

சொல்லுவேன்சந்திரன் மேடத்தில்நிற்கில்
சுகமாகப்பிறந்தவர்க்கு வட்டமிட்டசெம்புபோலே
வெல்லுவேன்சிவந்தவட்ட மிட்டகண்ணனாய்
விளங்கவுடன்திரவியங்களிலே பிரியவானாய்
மல்லுவேசத்துருவுளன் கையுஞ்சினத்தாப்போல
மைந்தனேபிரிகையும் பிரயோசனமன்றியிலே
அல்லவேஓடியாடித் திரிதலுச்சந்தலையில்
அப்பனேவிரணவானா யபிமானியாயும்
நல்லவேல்போல்கையில் ரேகையுள்ளோன்
நவனாபகனுமாம்ரிஷபத்தில் நிற்கில்கேளே. (கருசா)

நிற்கவேசவுந்தரியோன் மார்புபிடறிதானும்
நீண்டிருக்கும்பிள்ளை யுடனசெவிடு
யெக்கவேமைந்தரொடு வேறுபடுதலுமாம்
என்பாக்கியமிருந்திடினும் ஸ்திரீகளாலவமே
மிக்கவேதனதாயு சுள்ளளவுமிதுவாம்
மிதுனத்திலேநிற்கில் ஸ்திரீகளின்மேலிச்சை
தக்கவேபோகத்தில் சமர்த்தனாகவுமே
சலசமலர்கண்கருத்துந் திரண்டிருக்கையுமாம். (கருஎ)

ஆமப்பாவெகுசாஸ்திர மறிந்தநிபுணனுமாய்
அரியதேசாந்திரமேபோய்த் திரிபவனுமாய்
ஓமப்பாகமூன்றதலை மயிரையுடையவனாய்
உகந்தபுத்திரமானசை கரிக்கைசுபாவனுமாய்
தாமப்பாபிரர்கருத் தறிதலுஞ்சூது
தஸ்காரவழக்குரைக்க வல்லவனுமாயும்
நேமப்பாவழகியவங்க முள்ளவனுமாயும்
நீர்கூத்துபாட்டுவரிந்திருக்கையுமவைகளிலே. (௧௫௮)

அவைகளிலேயிச்சையாயு முசந்தநாசியோனும்
அப்பனைகடகத்தில் நிற்கில்கேளு
தவறிலாவிளக்குழந்தை நடையுடையவனாய்
சாத்தவுயர்மருங்கினையே தான்படைத்தவனுமாய்
சுவையானதன்மனைவி கேளிக்கையோனாய்
சொல்லநல்லபந்துக்க ளுடையசம்பத்தோனாய்
தவமானதேவபத்தி சிலமந்திநெறியும்
தானெங்கேயிருந்தாலும் பெரியதோர்வீட்டோனாய். (௧௫௯

வீடன்றிஆவதவன் திரவியனுமாய்
விளங்கக்குரிதாயன்பா யிருக்குங்கழுத்தோனாய்
காடன்றியினிநாங்கொன்றை வசமாயிருக்கையுஞ்சீர்
கடினவசனத்துக்கு வாராதிருப்பவனாய்

யாடன்றிநீரிலந்தந்த வானங்கள்தனிலும்
பலகாலும்விளையாடும் பண்புபெப்போதோனும்
மேடன்றிசிங்கத்தில் நிற்கிலையா
மேன்மையிலாப்பெருங்கொடுமை யுடையவனுமாகி.

ஆகியேமாங்கிஷத்தில் பிரியவானுமாய்
ஆரண்ணியந்தனிலிருக்கை கோபிக்கிலையா
வேகியேகடைக்கண்ணுல் பார்த்திடுதலல்லால்
வேறேதொழிலும்பசியும் வியாமோகமிக்க
சோதியேயுதிர்வியாதியும் பலநோவுகளும்
சுகமில்லாமனதுக்க மந்தபுத்தியோனும்
ஏகியேகெறுவியுமாய் மாதர்களுக்கிதமாய்
இணங்கிப்பிரியாவாசை யாவானப்பா. (௧௬௧)

அப்பர்கேள்கன்னியிலே நிற்கிலையா
அழகியசிங்காரமிகு வடிவனுகும்
மெய்ப்பாகேள்நல்லாடை மேடையோனும்
மேவுந்தந்தைதாய் ஸ்ரீகளுடையவனும்
இப்பால்கேள்பூசிதனும் தேசாந்திரம்போவனுமா
யினியவசனங்களொடு ஸ்ரீபிரசைகளுடைய
தப்பாய்கேள்பலாபலமும் ஸ்ரீவார்த்தைசொல்வோன்
சத்தியவாக்குள்ளனுமாய் தர்மவானும். (௧௬௨)

தர்மவான் துலாத்தில்நிற்கில் மறையோரோடு
சாதுசனங்களையும் சற்குணங்களையும்பூசிக்க
மர்மமாம்வித்தைபுத்தி யுணர்வோனையா
மாதர்களைசெயிக்கவித்தை கற்பனையுமுண்டு
கர்மமாய்நினைவில்லா னுயர்ந்தமூக்குடையோன்
காத்திரமுள்ளோனர்த்தமுள்ளா னினைவங்கிஷத்தோன்
இம்மையிலும்மறுமையிலும் பிராமணர்பந்துக்க
ளிவர்களுக்குப்பொருளளிப்போன் குணவானாமே. (௧௬௩)

குணமானவிருச்சிகத்தில் நிற்கிலப்பா
குறியில்பெருமுழிகளுள்ளோன் பெரியமார்புள்ளோன்
நிணமானவுருண்டமணி முழந்தாளோடு
நெடுங்கொடியசேஷ்டையும் மீன்போலவச்சிரம்போலும்
அணமானபட்சிபோலுங் கைரேகையுடையோன்
அஞ்ஞானபாவதொழில் செய்பவனுமாவான்
கணமானதனுசில்நிற்கில் நீண்டயாக்கையோனும்
கருதவதாரத்துடையோன் பிதாவுக்குவாத. (௧௬௪)

வாதசேதசிவித்தைகவி பாடுகையும்யெல்லா
வார்த்தைசொல்லவல்லவனு மெப்போதைக்கும்
பேதியாதொருகாரியமே செய்வனுமாய்
பேணுஞ்சிற்பக்கருமங்கள் செய்யும்நெறியோனும்

நீதியிலா அற்பமதியோரை திருத்திடவும்
நிலையாந்தன்னாலிலக்கினஞ் செய்யவகையும்
ஓதுமதிபலவானும் காரியங்கள்தன்னை
நினைத்தபடியன்றிமற்றோர்விதம் போகவிடுகொன். (கசுரு)

போகவிடான்மகரமதிலே நிற்கில்
புத்திரரொடுமனைவியொடு விளையாடுகையுமாகும்
ஆகவிடான்தான்செய்த தர்மந்தானும்
அவைக்குக்கீழ்மாய்கையு மழகுகண்கள்
வாகுலாவியநெருங்கின பாடையும்வார்த்தை
வசனத்திற்சொன்னபடி இரங்கின்றதுவும்
பாகதுபோல்கிளிமொழியாள் வசனித்தல்மிக்க
பின்பேபாடுசரீரசம்பத் துடையோனாகவுமே. (கசுசு)

உடையன்னலெச்சமயத் துக்குஞ்சோம்பன்
உலகத்தேதிவெயந்தாகி கொண்டாடித்திரிவன்
திடமானநிலையுடையோனன் [illegible]நிற்கில்
திறமென்ன [illegible] புடைத்தேநிற்கும்
திடமென்ன [illegible] நெருக்க[illegible]யும்
நெடுகவிருக்[illegible] [illegible] திருமுகமேம்
படம [illegible] நினைப்பும்
பார் [illegible] திருமனைகளுடையனும். (கசுஎ

களையென்னபூசனைவிருத்தி லச்சையுடையவனும்
கருதயின்னமெப்போதும் நடக்கபிரியன்காண
தனையென்னமீனம்நின்றால் சிலசாஸ்திரங்கள்
தானறிதல்ஸ்ரீகளிடம் பிரியமுள்ளவனும்
அளவென்னகாத்திரமு முயர்ந்தமூக்கும்
அப்பனேபெருத்ததலையோ னாகுமிக்க
கிளைவென்னசத்துருக்கள்தனைச் செயிக்கவல்லோன்
கேள்மகனேபோகியவன் பண்டிதனுமாமே. (கசுஅ)

ஆமப்பாஆதித்தன் பலனைக்கேளு
அப்பனேமேஷத்தில் ஆதித்தனின்றால்
நாமப்பாசொல்லுகிறேன் சாலப்பிரசித்தன்
நாணிலத்தில்சத்துரு சிரமாயிருப்பன்
ஓமப்பாரிஷபத்தில் நிற்கில்கேளு
உயர்சுகந்தத்திரவிய வியாபாரனாகும்
தாமப்பாஸ்ரீயாசைப் பட்டுமென்றித்
தான்சிலுப்பிவெட்டெனச்சொல் லுடையோனவான். ()

ஆவானேவாத்தியங்கள் பாட்டுகேழ்க்க
அப்பனேபிரியமுள்ளோன் மிதுனதநில்நிற்கில்
போவானேவித்துவா னாகிமேலும
பெரியசோதிடசாஸ்திர வானையப்பா

மேவானேஅர்த்தமுடை யோனுமாவான்
மேன்மையுடன்கடகம்பின்ருல் கொடியனெனவாகும்
தாவானேன்றிரவியயினன் பிரர்காரியஞ்செய்வன்
தயங்கவேயெப்போதுங் கிலேசனுமே. (களஎ)

ஆமப்பாசிங்கமென்ருல் கொடியமலைகளிலும்
அப்பனேவயசுபிறைகளினி லிச்சையுண்டாய்
ஓமப்பாவறிவுடையோன் கன்னியானல்
உகமையுடன்சித்திரங்க ளெழுதுவானே
தாமப்பாசோதிடஞ் சொல்லிடுவான்றிரேகம்
சாத்திரவடிவாக யிருக்குங்கோலென்னில்
வேமப்பாசுரர்சேர்வை செய்தும்வழிநடந்தும்
[illegible]ழிதூதுவிபாபாரஞ் செய்துங்கீழ்பட்ட. (களக)

கீழ்ப்பட்டசாதியோ டிணங்கியிருப்பான்காண்
கெட்டிவிருச்சிகமென்ருல் கேளாயடமகனே
வாழ்பிட்டவார்ச்சிகபட்டதனத்தோடு
மகத்தானசாத்திரங்கள் முடிபிராப்பத்திருப்பான்
பாழ்விட்டதனுசென்ருல் கவிவாணன்ருனே
பலகாலுங்கொண்டாடுந் தனவானுகை
வேழ்தொட்டக்கொடியனுப் வயித்தியவித்தையடைந்தும்
விளங்குமிக்கிருஷிதையி லிச்சையோனுமைபா. (களஉ)

அப்பாகேள்மகரமென்றால் நீச்சனாகி
அசடுசிறுபணியாகி குடிலனாகி
மெப்பாகேள்தனயீன னாயிருப்பான்
மேலானகும்பமென்றால் மெய்வாசகனுமாய்
பொய்யாகேளுச்சாயமும் பத்தயீனனுமாம்
பூவையர்கள்பலரின்மே லிச்சையோனையா
செய்யாகேள் மீனமென்றால் சிலயாத்திரைபலமும்
சிறப்பானசங்குமுத்து வுள்பட்டவஸ்தே. (கள௬)

வஸ்துகொண்டுவிற்பன் ஸ்ரீகளினாலேவையா
மகிழுவாதரிப்புண்டாவாழ்வன் செவ்வாய்பலன்கேள்
சுத்தமாய்மேஷம் விருச்சிகத்தில்செவ்வாய்
சேர்ந்திருக்கராசாவால் பூசிக்கப்படுவன்
மெத்தவோபிரயோசனமேயன்றித் தனித்திருப்பன்
மேவுஞ்சேனாதிபனாயும் வணிகனுமாய்க்களவு
உத்தபயவிஷபோகி யாயிருப்பன்
உகந்தரிஷபத்தில் துலாத்தினிலேநிற்க. (கள௭)

நிற்கஸ்ரீகளைத்துதித்துப் பொதுகலகனுமானாய்
நிலையில்லாப்பரதாரங்களை விரும்பியாசை
மெய்க்குள்ளேகொண்டுகுரளி மந்தரத்தைபலகாட்டி
வேஷதாரியாயெவர்க்கும் பயங்கரனாய்வாழ்வன்

புக்கவேமிதுனங்கன்னி யிருந்தாலையா
பொருமையுடையவனாகும் புத்திரசம்பத்தோனும்
மிக்கவேபெற்றுயனுப் கிறுதனாகி
மிகுந்தகெறுவிதானாகி பாட்டுங்கூற்றும். (௧௭௫)

கூத்துடனேபோரினுக்கும் சாலபலவானாய்
கொண்டுபயமன்றியெல்லாம் விரும்புதலையுடையோன்
சாத்தகடகமேநின்றால் ரத்தமுள்ளோனாகித்
தண்கடலிலோடியும் புத்திரனுள்ளோனாகி
ஏத்துதலில்லாதபொல் லாதவனாய்க்கள்ளன்
எனசீவிக்குஞ்சிங்கத்தில் திரவியயீனனுமாய்
ஆத்துதலில்லாகிலேசம் பொருத்திடவல்லவனாய்
அருங்காட்டில்பயணமன்றி திரிவான்புத்திரன். (௧௭௬)

அரப்புத்திரன்தனுசோடு மீனத்தென்றால்
அரசனுமந்திரியெனப் பேருடையோனாகி
விரப்பெறவேபகீனன் பிரசைமிகுதியுள்ளோன்
மிகுகும்பம்துற்கிதன் திரவியயீனனுமாய்
சொரபானமாயோசனமன்றி நடந்துதிரிந்தலைவான்
சோம்பிபொய்சொல்லுவன்காண் மகரமென்றில்
நரபுகழாமாத்தவானப் பிரகாசமதையுடையோன்
ராசனால்ராசஸ்திரீயால் நன்மையுடைத்தோனும். (௧௭௭)

நன்மையாம்புதன்பலத்தைச் சொல்லக்கேளு
கன்மேஷம்விருச்சிகத்தில் புதனேநிற்கில்

துன்மையாம்சூதுபோர் செய்யவல்லோனையா
சொற்பிரகாரம்பொசிப்ப னவற்றில்சிரத்துடையோன்
கன்மமாம்சொர்னதிரவிய யீனன்பொல்லா
காரிழைபோனயிடமாய் கொல்லும்பாவியாகுவனே
யின்மையாம்ரிஷபமொடு துலாத்திலென்றால்
எல்லார்க்குங்குருவாவன் பிரசையுடையோனே. (கஎஅ)

குருவாவனிரையதார முடையோனையா
குணவான்றனக்கிச்சை யானபலாபலமும்
திருவானநன்மைகளுங் குருவிசுவாசத்தோன்
செப்பியதோர்மிதுனமெனில் விவகாரசீவனமும்
தருங்கர்சாஸ்திரங்கொண்டு விவகரிக்கவல்லோன்
தரணில்சிற்பகருமங்களுக்கு வல்லோனையா
மருவியெல்லார்க்கும்பிரியஞ் சொல்லவல்லோன்மேலும்
மாகாரியிச்சையுண்டாமேனன் கடகமதில்நின்றால். (கஎகூ)

கடகமென்றால்நீரிழிவு மற்றும்பலவியாதி
காசிலெல்லாசெனங்களுக்கு வுபவோனும்
விடகசிங்கமெனுமங்கை யிவர்களபகரித்தும்
விரகபிரதாயினன் பிரயோசனமேயன்றி
கடமைதனித்திருக்கையறி வில்லான்மிக்க
சாந்துகளபத்தில்ச்சை யோனும்சன்னில்
திடமுடையோனறிவுடையோன்கொடுமையுடையோனுக
தீர்சுகந்தமுடையவனும் துலாமெனிலோகேளே. (கஅ0)

கேளய்யாசுகந்தந்திரவியங் கூட்டவல்லோன்
கெடியில்லாப்பயவினன் மகரங்கும்பமென்னின்
நீளய்யாராசாக்களாலே கொண்டாடிடுவோன்
நிலைத்தியவானுகும்மெய் வாசகனுமாம்
ஆளய்யாகுருபலத்தை சொல்லக்கேளு
அப்பனேமேடம் விருச்சிகத்தில்நின்றால்
வேளய்யாசேனைதலை வனுமாய்நிற்க
வெற்றியுடனிரைந்தவதி காரமுடையோனே. (கஅக)

அதிகாரன்மைந்த ருடையோன்தாதா
அரியபந்துக்குளுடையவ னழகோனுகும்
விதிகாரரிஷபந்துலாம் நல்வடிவோனல்ல
மெய்யன்பிரஜைகளுடையோனல் தாரமுடையோன்
அதிகாரன்மாமிதுனங் கன்னியென்னில்
சொல்லாதபந்துஜெனன ஸ்ரீசுகியனுமாம்
நிதிகாரகடகமெனில் ஆதினமுடையோன்
நிலைநல்லஸ்திரீயுடையோன் சுகிபானுமே. (கஅஉ)

ஆகுமேசிங்கமெனி லிராசர்க்குச்சரியோன்
அரியசேனாதிபதிதன் முடையோனையா
போகுமேவினைதனுசு வேதவேதாந்தம்
புகழ்வித்துவானுகுந் தேவபக்தியுடையோன்
யேகுமேதரித்திரங்கள் மெஞ்ஞானியாவான்
இயலில்லாமகரத்தில் நீச்சனெனலாகும்

சோகனுமற்பவித்தை யுடையோனுக
சுகமில்லான்தோல்கும்பமெனில் சொல்கடகபலனுமே. ()

பலனுகுஞ்சுக்கிரப்லன் சொல்லக்கேளு
பண்புமேடங்தெளி லிருக்கபலஸ்திரீகள்
அலமுடையோன்திரவியங்க ளழித்துதன்குடிக்கு
அப்பனேயிழுக்கானவகை செய்வான்கோய்
தலமானரிஷபந்துலாம் புத்தியுடையவனும்
தனவானும்ராஜாக்க ளாலேபூசிப்போன்
குலமானபந்துகட்கு உதவியாளன்
கொற்றவனுமிதுனராச காரியமேசெய்து.        (கஅச)

செய்தரத்தனுகுவனும் சிற்பகருமவானும்
சீவிக்குங்கன்னிதிரவியனும் ராசதுவாரத்தில்
மெய்யுரத்தங்னேத்தை விருத்திதனைசெயகலும்
மேலானமக்களுடன் நல்லமங்கையரை
பெய்துமேபொல்லாப்புக் காரனுகும்
பெருங்கடகமதுவென்னில் பேணிரண்டுஸ்ரீகளுண்டாமவ
ர்கள்மேலிச்சை, வயதளவும்பலவானும் விரகசோகியாவன்
மைந்தனேசிங்கமெனில் ஸ்ரீகளினுற்கொடுக்கும். (கஅரு)

கொடுக்கின்றதிரவியனும்நற் பெண்களுடையோன்
குடும்பிரசைகளுடையோன் தனுசுமீனமென்னில்
அடுக்கின்றமெயவனையும் கொண்டாடச்செய்தும்
அழிந்ததிரவியயினை னுகிடுவன்முற்றும்

கடுக்கின்றசனிபலத்தைச் சொல்லக்கேளு
நாடிமேஷம்நண்டினிலே யிருக்கிலேயா
கடுக்கின்றதாயெப்போதும் சிறைகடந்துமெத்த
கவலையொடுமாறுட்டஞ் செய்துமொன்றினிலே. (கஅசு)

ஒன்றினாலும்நிலையில்லா சீவிக்குமிதுனந்தான்
ஒருக்காலும்லச்சையன்றி மருமங்கள்செய்வன்
மன்றினிலேபுத்திரருண்டு மாயநினைவலே
மயங்குவான்ரிஷபமெனில் சொல்லக்கேளு
வன்றினிலேதிரவிய முடையோனுமாகி
வப்பனேஸ்ரீகளுடை யோனுமாவான்
கன்றினிலேதுலாமென்னில் தியாகியெனலாகும்
கதித்தபடையாலுஞ்சத் துருக்களாலும். (கஅஎ)

சத்துருக்களாலும்பூ சிக்கப்பட்டுத்
தனகனவானாயிருப்பான் கடகமதிலென்றால்
மெத்தபலனேவுடையோன் வர்ணசிர்மங்கெட்டு
வேசிதனைத்தாயன்றி பாரியன்றிகூடி
வித்துதனை அஞ்ஞானி யாயிருப்பான்
மேவிசிங்கமேயென்னில் சுகமில்லானெவர்க்கும்
நித்திலுமேதொழிற்செய்வன் தனுசுமீனமென்னில்
நீகேளாய்சுகந்தீர்க்கும் வார்த்தையில்நல்லவனே., (கஅஅ)

நல்லபுத்திரருடையோன் ஸ்ரீகளையும்தனத்தோனும்
நவிலுமகரங்கும்பமெனில் புரங்களொடுதீராம்

வல்லதற்கும்படைதனக்கும் தலைவனாகுவன்கேள்
வகையோடுசினங்கள்திரண் டிருக்குமையா
வில்லசிக்கென்றிருக்கையும்பெருக உண்ணவல்லோன்
விளங்கியிவ்விதம்வாழ்வான் மேலின்னங்கேளே. (கஅக)

இன்னமென்னவொருவன்பிறந் திடும்போதுமைந்தா
யெழில்சந்திரனிவனைக்கூடி நிற்கவல்லதுகேள்
உன்னியேபிரமனின்று நோக்கிடிலும்பலமாம்
ஓகோகோசந்திரனொரு ராசில்கூடில்நிற்கில்
மன்னவேமேடந்தலை மீனங்காலாக
வகுத்தாக்கால்புருடனுக்கு யெந்தவுருப்பினிலே
துன்னவேஅஷ்டத்தின் மருவென்றுசொல்ல
சுகமானகிரகநோக்கும் பலத்தைக்கேளே. (கஅ)

கேளய்யாபுதனோக்கி லாயிரங்குற்றந்தீரும்
புகழானவெள்ளிநோக்கில் பெலத்தைச்சொல்ல
ஆளய்யாபதினாயிரங் குற்றங்கள்தீர்க்கும்
அப்பனேகுருநோக்கி லருணனையேகண்ட
நீளய்யாயிருள்போலே நீங்கிவிடுஞ்சொன்னேன்
நினைக்கநூறாயிரங்குற்றம் நொடியில்விட்டோடுமே
வாளய்யாசித்தசுபம நாலூறுபிழைதீர்க்கும்
நாடுஞ்சுபமமுதமதால் பலவினையும்விடுமே. (கஅக)

விடுமையாயிவர்க்குறவு சொல்லக்கேளு
வேதாந்தியானுக்கால் கண்டுதெளிவான்காண்
தொடுமையாரவிக்குறவு பொன்னேயாகும்
சுகுணமிகுமதிதனக்கு குருவும்புதனுகும்
நெடுமையாசெவ்வாய்க்கு வுறவுகேளு
நிலையானபுதன்வெள்ளி நிலக்கப்பாரு
முடுமையாபுதன்றனக்கு ஆதித்தனொழிய
யெல்லாருமுறவாகு மியம்பக்கேளே. (கசுஉ)

இயம்பவேகுருவுக்கு குஜனொருவனொழிய
எல்லாருமுறவாகு மசுரர்குருவுக்கே
நயங்கேளுசனிசெவ்வாய் புதன்வியாழம்
நாடியேமனக்கண்டுதெளி நவில்வேனின்னம்
உயமின்னசனிக்குறவு புதன்பொன்வெள்ளி
பண்பிவர்களல்லாது மற்றவர்கள்பகையாம
அயமென்னயிவ்விதமே டார்த்துச்சொல்லு
அப்பனே ஆட்சிவச்ச மறையக்கேளே. (கசுஙு)

அறையமைந்தா ஆதித்தனுக்கு ஆட்சிசிங்கம்
அப்பனேசந்திரனுக்குக் கடகமாகும்
நிறையவேசெவ்வாய்க்கு மேடம்விருச்சிகமாம்
நிலையானபுதனுக்குக் கன்னிமிதுனமதாம்
உறையவேவியாழனுக்கு தனுசுமீனம்
உகந்தவொருவெள்ளிக்கு ரிஷபந்துலாமாகும்



தெரியவேசனிதனக்கு மகரங்கும்பமாகும்
செப்பினேனுட்சிதனை வுச்சங்கேளே. (கசுச)

உச்சமதுரவிதனக்கு மேடமாகும்
உகந்தசந்திரனுக்குச்சம் ரிஷபமேயாம்
மெச்சவேசெவ்வாய்க்குச்ச மிதுனமதாம்
மேவிநின்றபுதனுக்குச்சங் கன்னியெல்லாம்
பட்சமிகுகுருவுக்குச்சங் கடகமதாம்
பளிங்கனுக்குச்சமீனம் சனிக்குதுலாமாகும்
லெச்சையுருங்கேதுராகு தனக்குமைந்தா
நிகழ்த்தவிருச்சிகமாகும் நீசங்கேளுமையா. ( சுரு)

நீசமென்னவிதற்கேழாம் ராசியதுநீசமாகும்
நீகேளாயொன்றிரு லேழுபத்துதையம்
வசமென்னவுதயமென்றும் நீர்கீழென்றும்
வசனிக்கபாடென்றும் மூச்சியென்றும்
துசமென்னநான் [illegible] திண்போகம்
சொல்லபுதன்வியாழமுதயத்தில்வலியோராம்
இசமென்னபு[illegible] [illegible]வலியார்
பியல்பாம்பு[illegible] [illegible]யானக்காணே. (கசுசு)

காணய்யாகுசனிராகு உச்சியில்வலியோர்
கனகபுதனுக்கு[illegible] [illegible]செவ்வாய்க்கு

தோணய்யாசனிவலிது சனிக்குகுருவலிது
சொல்குருவுக்குபுகர்வலிது புகர்க்குமதிவலிது
ஊணய்யாமதிக்கு ரவிவலிதுரவிதனக்கு
யுதித்தவொருபாம்பு வலிதெனவேஹுரலுரைக்கும்
வீணய்யாசொல்லவில்லை சூத்திரமும்பாரு
விளங்கவதில்யோகபலன் மற்றுமதிற்காணே. (கசுஎ)

காணடாவுலகில்லெளி யார்கள்போலே
கவனமிகும்பெரியோர்கள் வருவதுண்டு
ஆணுவத்தாலலையாதே யவர்கள்பதம்பணிந்து
அநுசரித்தால்காயகற்ப மருளோடும்பொருளும்
ஊணவைப்பார்சூத்திபெண்டு களையேகண்டு
ஊரியெமனேயுங்கொண்டு வொதுங்காதேயையா
பேணிவிட்டசாஸ்திரங்கள் பெரியோராலே
பேருலகில்வந்ததைப் பிரித்துப்பாரே. (கசுஅ)

பாரடாவதினாலே மனதுதேரும்
பாவிகளேயென்வீணைப் அலைகிறீர்கள்
ஆரடாமைந்தர்களே யானுரைத்தநூலில்
அணுவளவும்பிசகாது அறிந்துகடத்தேறு
நீரடாஆகும்வினை யென்பாடலாலே
நிலைத்துவைம்பதினில்ஞானம் நிலைக்கக்காணு
பேரடாவைம்பதினி லிரண்டுசொன்னேன்
பேசாதமொழியதனில் பேணலாமே. (கசுகூ)

மொழியினிலேராமதேவர் பாலினுள்வெண்ணையைப்போ
லுரைத்தநிகண்டன்னூறை யுருதியுடன்காணு
பிழையிலாவாயிரங்கா வியத்தைப்பாரு
பேசிவைத்தவந்நூறு நிரட்டைப்பாரு
உழையிலாமுன்னூரு வகையைப்பாரு
லுகந்தெடுத்ததண்டகத்தின் உறுதிபாரு
மழையிலேமெஞ்ஞான மழைபதாக
மாட்டிவிட்டார்முனிவர்சித்தர் மார்க்கந்தானே.     (உ௱)

மார்க்கமென்னபலநூலைத் தேடிப்பாரு
மைந்தனேசிவயோகந் தரிவில்லிலு
தீர்க்கமென்னயிதைவிடவே தீர்க்கமுண்டோ
தேவடியாள்மக்களுக்கோ யின்னூல்கிட்டும்
மூர்க்கமென்னரோமரிஷி நூலும்பாரு
நுவலுமதில்சோதிடமும் நன்றாய்ச்சொன்னார்
ஏற்கையென்ன யென்குருவாம்புஜண்டர்பாதம்
யிருநூறுசோதிடனூ லினிதுமுற்றே.     (உ௱க)

ரோமரிஷி சோதிடசிந்தாமணி-உ௱

முற்றுப்பெற்றது.

உ

கணபதிதுணை.

# இராமதேவர்ஜோசியம் - ம.



காப்பு.

ஆதியினில்வேதன்முன் னன்பாய்ச்சொன்ன
அருமறையின்பொருளான ஜோசியத்தை
சாதியினில் மறவனும் ராமன்வாக்கியந்
தவறாமல் சற்குருவின் பாதம்போற்றி
சோதியினில் ஜெகச்சோதி சோதியான
சோதிஷமாம் நவக்கிரக ராசியப்பா
நீதியினில் நீடுலகில் நன்மைதீமை
நேர்பிறைகள் சொல்லுதற்கு யிந்நூல்பாரே.

நூலின் வரலாறு.

பாரேநீஜோசியநூல் பாடல்பத்தும்
பத்திகொண்டுநிற்கனிலே ருசிபார்த்து
நேரேநீசொல்லுவதால் நன்மையாகும்
நீடுலகிலிந்நூலை வெளியிட்டாக்கால்
சீரேநீமதிமறந்து பேய்போலாவாய்
திறமாகநவக்கிரக நிலையைப்பார்த்து
கூறேநீ குருபதத்தை வணங்கிப்போற்றி
குணமாக ராசியதைக் குறிப்பாய்ச்சொல்லே. க

சொல்லுதைய் ராசிதனக் கந்நிலபத்தில்
சோமவான் சேய்நிற்கில் மாமர்க்காகா
புல்லும்வாய் சனிநிற்கில் பிள்ளைக்காகா
பொல்லாத சசிநிற்கில் மாதுற்காகா
சொல்லுதைய ரவிநிற்கில் பிதாவுந்துஞ்சும்
சேர்ந்துநின்ற ரவிசோம னேழுக்கப்பால்
கொல்லுகின்ற சனிசெவ்வாய் நிற்பாராகில்
குருபாராத் தந்தைதாய் மரணமாமே. உ

ஆழுதைய ராசிதனக் காறில்சூரியன்
அதற்கேழில் சனிசெவ்வா யமைப்பேயானால்
போமுயிரும் பிள்ளைதனக் காரில்சோமன்
பொருந்தேழில் சனிசெவ்வா யமைப்பேயானால்
தாமதமாய் பிள்ளையுந்தான் உதையராசி
சனிநின்று அதற்குநால் செவ்வாய்நிற்கி
னும்பிதாமரணம் ஜென்மத்திறகப்பால்
நலமான கிரகம்நிற்கில் பிள்ளைசாமே. ௩

பிள்ளைராசிக்கு மூன்றதிலேசெவ்வாய்
பெரியசகோ தரமரணம் பொல்லாதென்னக்
கொல்லுசனி செவ்வாய்தா னிற்குமாகில்
குழந்தைசாம் சசியேழில் நிற்பானாகில்

வெல்லுகின்ற மாதாதான் மரணஞ்சூரியன்
மேவுமதில் பிதாவாகா கடகராசிமூன்றில்
சொல்லுமப்பால் கிரகம்நிற்க பன்னிரண்டில்
செம்மைசுபக் கிரகம்நிற்கிற் பிள்ளைசாமே. ௫

சாமென்ற ராசிதனைக் காறேழெட்டில்
சரமான பன்னிரண்டில் சந்திரன்பேகில்
போமென்று உயிர்போகும் ரவிசோமனிற்கில்
பொருந்திரண்டு திருஷ்டியும்போம் ஒருவர்நிற்கில்
தாமென்ற வோர்திருஷ்டி நீங்கிப்போகும்
சந்திரனொன்பதிலே பாம்புநிற்க
ஆமென்ற தாய்மரணம் அஷ்டமத்தில்
ஆனசனி சேய்நிற்கில் பிள்ளைசாமே. ௬

புனர்பூசம் சித்திரைபூ ராடமிந்த
புகழ்நாளில் சசிநிற்கில் குருசெவ்வாய்
நலமாக நிற்கிலந்த பிதாவுக்காகா
நன்மையிரண் டாங்காலில் மாதாவுக்காகா
குணமான மூன்றாங்கால் பிள்ளைக்காகா
கொடுமையுள்ள நாலாங்கா லம்மானுக்காகா
நலமான பதினொன்றான் பதிலுமைபா
சனிசெவ்வாய் பாம்புநிற்கில் தவறிப்போமே, ௭

போதமொடு ரவிக்கேழி லாறில்வுச்சம்நிற்க
புனிதமுடன் சிங்கத்தில் பிறந்தோன்ராஜா
நீதமோ டைந்துகோ ளுச்சம்வியாழம்
நின்றதனால் தீர்க்கமுள்ள மன்னனாவான்
பாதமொடு நாலுகோ ளுச்சங்கும்பம்
பதிவானால் பரராஜ சிங்கமாவான்
சாதமொடு வக்கிரக ராசிதன்னைப்பார்த்து
தவறுமற்சொல்வது சாதகமுமாமே. ௭

ஆம்கடகம் வியாழமதே யுதையமாக
ஆதித்தன் மேஷமதி லுதையமாக
போம்வெள்ளி புதனோடு பத்தில்நிற்க
புதல்வன் பிறந்திடிலவனும் சித்தனாவான்
தாம்சனி யிடபத்தில் ரவிசிங்கத்தில்
தருவான குருதனுசில் கசிந்துநிற்க
நாம்புகரில் உதையமதாய் வியாழங்காலில்
நன்றாக செனித்தவனு மரசனாமே. ௮

அரசனாந் சனிமகரத் தமர்ந்துநிற்க
ஆமெசெவ்வாய் மேஷத்தி லமர்ந்துநிற்க
சரமான சந்திரன்கற் கடகமெல்லாம்
தயவான வெள்ளிதுலாம் தன்னில்நிற்க

பரமான குருகனுசில் பத்தில்நிற்க
பகலவனும் சிங்கத்தில் பதிவாய்நிற்க
சிரமான புதன்மிதுனந் தன்னில்நிற்க
சேய்பிறக்க வரசனும் தீர்க்கமாமே. ௯

ஆமென்ற கிரகனிலை ரவிபுதன்வெள்ளி
அமர்ந்திடுவர் ஒருராசி யதனிலோர்மாதம்
போமென்ற மதிநாளும் ரெண்டேகாலாகும்
புத்தியுள்ள மாதமொன் றரைதான்செவ்வாய்
தாமென்ற சனியாண் டிரண்டரையாய்நிற்கும்
தயவான வியாழமது வருடமொன்று
நாமென்ற ராகுகேதாண் டொன்றரையாம்
நடுவான கிரகனிலை நலமறியமுற்றே. ௰

இராமதேவர் ஜோசியம் - ௰
முற்றிற்று.

கடவுள் துணை.

# இராமதேவர் கிரகலக்கின சாதகம் - ௰௨

——————*:*:*——————

கிரகமென்ற யீராறு வீட்டினுள்ளே
　கெணித்திருந்த லக்கினத்திற் செல்லுபோக
விரகமெனு மிக்கநா ழிகையைப்பார்த்து
　விந்துவென பறல்பாத்தி விரைந்தேபேசு
சரகமெனும் லக்கினத்தில் கேதுவீட்டில்
　சரித்திரமே பார்வையெனச் சமையஞ்சொல்லு
அரகரா யிப்படியே செல்லுபோக
　அமர்ந்திருந்த நாழிகையைப் பரலாய்ப்போடே. ௧

போட்டப்பா சென்றநா ழிகையில்மிச்சம்
　பொருத்ததோர் நாழிகைக்குள் பிரபலத்தாலொன்று
வீட்டப்பா வெதிரிந்த வீடதனிலேதான்
　வீட்டிலுள்ள பறலத்னைநீ விரும்பிநன்றாய்க்
கூட்டப்பா சேர்த்துநன்றாய்க் கூர்ந்துபார்த்து
　கூர்மையதால் தானெடுத்துக் கூட்டிமாட்டு
நாட்டப்பா வுலகமதில் சுகவிந்தாக
　நாட்டியதோர் லக்கினத்தில் சிலனுள்நாட்டே. ௨

நாட்டப்பா யிப்படிக்குச் சிலநாள்வித்தாய்
　நாழிகைக்கு வோர்பரலாய் நன்றாய்நட்டுக்

கூட்டப்பா யெதிர்த்ததொரு திசையிடெங்கும்
கூட்டியெடுப் பிறலதனில் செல்லுபோக
போட்டப்பா யெண்ணிப்பார் நாலுக்கப்பால்
போட்டெடுத்த பறலதனில் போகமிச்சம்
கோட்டப்பா நடுவீட்டில் வைத்துயெண்ணிக்
கொண்டவிந்தை மண்டலத்தில்கொள்கைசொல்லே.

சொல்லப்பா செல்லுபோக மிச்சம்பார்த்து
சொல்லிவிடு அனுகூல னுலுக்கப்பால்
நல்லப்பா மிச்சவிந்து ஆறுக்கப்பால்
நராதிபதி யாகவும்நீ நன்றாய்ப்பேசு
மெல்லப்பா மந்தகெதிக் கிவையுரைத்தால்
மேதினியிற் செகசண்டி மேன்மைகெட்டோன்
அல்லப்பா போயதனி லிப்படியுற்றாலும்
அசடனிவன் பொய்யில்மிச்சம் அசுத்தவானே.

சொல்லப்பா யிவைபறிந்து சூட்சம்பார்த்து
சொல்லிவிடு விந்துமயம் சொல்லொண்ணாது
மெல்லப்பா அடக்கம்வைக்க ரெண்டுமூன்று
மேதினியி லுரைப்பதற்கு வேண்டாங்கேடு
வெல்லப்பா செவ்வாயில் ஆறும்ஐந்தாகில்
வேசியெனச் சொல்லிவிடு களாஸ்திரகாரம்

சில்லப்பா தெறிபட்டு யெடுபட்டோடும்
  சிவசிவா ரெண்டதுவும் மங்களத்திற்பேசே. ௫

வெள்ளிதனில் நாலாருக் கதிகமுற்றால்
  மேதினியில் வேந்தனுக்கு வேந்தனாவான்
உள்ளிதனில் பொய்யோனு மந்தன்சேரி
  லுறுதியில்லை கெட்டதரித் திரங்கள்சேரும்
தள்ளதிலே செல்போக மிச்சம்பார்த்து
  சந்திரனில் நாலுக்கதிக மிச்சமாகில்
கொள்ளிதிலே நல்லவனிலச் சேர்க்கையாலே
  கோள்களையுமமைத்தல்செய்வான்குணக்கேடில்லான்

இல்லாண்மைக் குள்ளவனை மைந்தன்வித்து
  யெழுத்தாக வுலகமதி லிரந்துண்பானும்
சொல்லாமைக் குள்ளடக்கி அடக்கம்வேண்டாம்
  சொல்லிவிடு இரவலனைச் சொல்லுசொல்லு
வல்லாண்மைக் குடைய கெதாறெழுத்தால்
  வணக்கணமை கோனாத்து வாழ்வன்மெய்யாய்
நல்லாண்மை யாயுறைத்துப் பறலைப்போட்டு
  நலம்பெறவே சோசியத்தை நாட்டுநாட்டே. ௭

நாட்டப்பா கதிரவன் தன்வீட்டிலேதான்
  நாலுவித்துக் கப்பாலே வுயர்ந்தேறிற்கில்

போட்டப்பா தான்பார்த்து கெணித்துப்பேசப்
பொல்லாத கொடியபிடி கடன்காரர்க்கு
தேட்டப்பா தானழைத்துக் கொடுக்கமாட்டான்
தேகமதை சுயமாண மாகவேதான்
நாட்டப்பா உலகமதில் நாவிபோட்டு
நாட்டிவிடு மரணமென்று ஞட்டுநாட்டே.

புந்திதனில் மூன்றதுக்குள் மேலேநிற்கில்
பூதலத்தில் மன்னவன்தன் பிள்ளையாகில்
நிந்தனைக்கா ளாவதல்லால் வாழ்வனென்று
நிச்சயக்கான்றென்று நிசமாம்பேச்சு
சிந்தனைக்குள் வாமமுண்டு லாகிரியாலே
சிரிக்கவுமா ளாகவல்லான் சிலநாள்பின்னும்
வந்தனையாய் சுகமதாய் விழுந்துசாக
வல்லவனென் றுரைத்துவிடு வயதிரெட்டே.

இப்படியே பறலப்பொட்டுக் கணிதம்பார்த்து
யியல்புமர ணங்களொடு நயமாயுள்ள
மிப்படியே செல்லுபோக மிச்சம்பார்த்து
மேதினியில் மேன்மைபனு சூலம்பேசு
தப்படியில் லாமல்நன்றாய்த் தொகைவிடாமல்
தனித்தனியே பறல்பிரித்து சேர்த்துப்பார்த்து

துப்படியே யெதிர்விட்டு சேர்க்கைப்பார்த்து
துயர்ச்சையுள்ள சமயவிந்தை துடங்கிப்பேசே. ௧0

இந்தவிதம் பறல்போட்டுக் கணிதம்பார்த்து
யியல்புஅவ ஜயங்கள்ரண்டு மெடுத்துப்பேசு
சுந்தவிதம் லக்கினத்தில் சுயவிந்தேதான்
சொல்லுமிந்த நாலிதர்க்கு வதிகமுற்றால்
எந்தவிதக் கோளாலு மெடுபடாது
யென்னசொல்வேன் பறல்சூட்ச மியம்பொறைது
முந்தவித மயர்ந்துபற்றும் தெரிந்தாயானல்
முடிவாகும் சோசியத்தின் வடிவங்காணே. ௧௧

காணப்பா யிப்படியேசோ சியத்தைநீயும்
காண்பதற்குப் பறலதனில் காரணங்களெல்லாம்
வீணப்பா போகாமல் நன்றாய்ச்சொன்னோம்
வீட்டிலுள்ள பறல்களெல்லாம் விரும்பிப்பாரு
பேணப்பா பறல்பதிகம் பத்தும்போதும்
பேராசை யுற்றவர்க்கு ஐம்பதுவும்போதும்
தோணப்பா வுரைத்துவிட்டோம் நன்றாய்ப்பார்த்து
தொல்லுலகில் சோசியத்தைச் சொல்லிவெல்லே. ()

இராமதேவர் கிரகலக்கினசாதகம் - ௧௨

முற்றுப்பெற்றது.

கடவுள் துணை.

சற்குருவே நம:

# இராமதேவர் சோசியம் - உ௱.

—— ※ ——

## காப்பு.

பலகலைநூனினுள்ளாய் பகர்ந்திடும் சோசியத்தில்
புலமதி யுள்ளதெல்லாம் பொறுக்கிநான் இருநூறுக்குள்
உலகினி லிராமதேவ னுரைத்தசாஸ் திரத்தின்சூட்சம்
இலகிடும் பயனைநன்றா யியல்புட னுரைக்கலுற்றேன். க

உற்றவேல்முருகன்முன்னோனுகந்தகுஞ்சரத்தைவேண்டி
பத்தியா யிருனூறுக்குள் பயனதை வெளியாய்நன்றாய்
சத்தியுஞ் சிவனுமாலுந் தன்பத மிகவேபோற்றி [ன்றே.
புத்தியா யுரைத்தசாவி புகழ்ந்துகொண் டருள்வோர்க்கெ

உண்மையாய் ராமதேவ னுரைத்ததோ ரிருனூறுபா
ட்டு, நுண்மையாய் மனதிலெண்ணி னூறிருஐந்துபத்தும்
தன்மையாய்க் கவசம்செய்யிற் றரணியில் நினைத்ததெல்
லாம், வண்மையா யுரைத்தோம்நன்றாய் வாரணமுகத்தோ
ன்காப்பு. ௩

திருத்தகு பாதஞ்செம்மை யுடையதாய்ச் சிறியதாகில்
உருத்தகு மடிகளொத்து வுயர்விலாப் பாதமண்மேல்

பொருத்தனங் குடைகளாகிற் புறவடி தகிக்கும்பெண்கள்
இருத்தகுஞ் செல்வியாகு மியம்பினே னுரைசெய்வாயே.

நூல்.

தரணியோர்க் கிதமாயுள்ள சாதகர்க் கிந்தமூன்று
பரணியிற் பிறந்திந்த பாவ லக்கினத்தோனாகில்
இரணியன்தன்னைப்போல வியல்பதாய்செயலாய்வாழ்ந்து
மரணமாய்க் கடுவாய்வாயில் மாண்டவ னிறந்துசாவான்.

வித்தைக்கு வுடையோன்மூன்று பேருமே யாறுநின்று
புத்தியாய் நோக்கிப்பார்க்கில் பிறந்தசா தகர்க்குநன்றாய்
எத்தையாம் சகலபாஷை யியம்பியே பேசவல்லன்
சத்திய மிதுவேயுண்மை சாதகன் றனக்குக்கேளே.

கேளுநீ யிந்தபாகங் கெணித்ததோர் லக்கினத்தில்
மூளுமே யிருபத்தேழு முற்றமுங் கெணிதமொப்பாம்
நாளுமே யிந்தமார்க்கம் நன்மையின் விதிதப்பாது
கோளுமே மூன்றுபேருங் குணமென வுரைக்கலாமே. எ

ஆமெனுஞ் சாதகர்க்கு ஆயிசு வாழ்விரண்டும்
நாமெனு முரைத்ததம்பத் ததினுட னலம்பொய்யாது
சோமெனும் ரவியுங்கூடித் துலங்குஞ்சா தகனோர்நாளும்
காமெனும் வேசிகைக்குள் கஷ்டமே படுவனென்றே. அ

குருவுட னிரண்டுகோளும் குணமுடன் பலவானாக
ஒருபதி தன்னிலேற நட்பாட்சி ஆட்சியுச்சம்
இருவரு மொன்றாய்க்கூடி லெண்ணிலாச் சுபரோபார்க்கில்
பெருநரவா கனங்கள் பெற்றிடுங் கீர்த்திமானும். ௯

பொன்னவன் வெள்ளிபார்க்கில் புண்ணிய ரிவர்கள் கூடி
பன்னுகேந்திரத் திரிகோணம் பதியிலே வனைகமுள்ள
வன்னவா கனங்களுக்கும் மன்னவ னாகும்ராஜன்
என்னலா மிவையல்லாமல் இம்மையில் வணங்குவானே.

வணங்குவான் லக்கினத்துக் கெட்டினில் வியாழமின்று
யிணக்கவே யெவரிரண்டு பேருடன் கூடிபார்க்கில்
மணக்கம ழென்றுவீசும் மதகரி வாசல்நிற்க
யிணக்கமாய் வாழ்வனென்று யியம்புமிச் சாதகர்க்கே. ௧௧

இதுவுமது - வேறு.

புந்தியினில் புதன்கேது ராகுசேரில்
பிரபலசா தகன்தனக்குப் புதல்வனற்று
அந்நியத்தில் வயதுமுப் பத்திரண்டில்
அன்னைபிதா களத்திரங்கள் வகைகள்ரெண்டும்
நிந்தனையாய்ச் செத்திறந்து கருமஞ்செய்து
இகட்சிபெற மதாச்சாரங் தப்பிவாழ்வன்
மந்திரவா னிவனுடைய நடத்தைசெய்யுள்
மாணமன்னிய ஸ்திரீயிடத்தில் மார்க்கம்பேசே. ௧௨

கோளகனும் செவ்வாயும் ராகுங்கூடி
குருவுடனே லக்கினத்தைப் பார்த்துநின்றால்
வேள்மகனைப் போலழகன் அதிகரூபன்
வேந்தனைப்போல் வையகத்தி லிருக்கவாழ்வான்
யேழதனி லிவர்கூடி லெட்டிலாறில்
இருக்கவந்த சாதகர்க்குத் திஷ்டிரெண்டும்
பாழாக யிருவிழிகண் பொட்டையாக
பார்தனிலே மிகவலைவன் றரித்தபாரே. கங

பாரெனவே யிக்கிரகம் பொய்த்திடாது
பார்த்தவரில் சுபக்கிரகம் பகைத்துநிற்கில்
கூறெனவே யொருவிழிகண் சுத்தப்பொட்டை
கூர்ந்திவர்கள் தன்னுட ஞதித்தன்சேரில்
நேரெனவே யிருவிழிகண் முழியிற்சூட்சம்
நெரியது பார்வையிருள் நெறிதப்பாது
தேரெனவே சொல்லிவிட்டோம் திறவுகோலாய்த்
தெரிந்துணர்ந்தோன் சோசியனும் தெளிந்துபாரே.

இதுவுமது - வேறு.

வாய்ப்புடன் லக்கினநாதன் தன்னுடன் குருகேது
காப்புட னவர்கள்வீட்டைத் தனித்தவ ரிருந்துபார்க்கில்

கோப்புறங் கெட்டமங்கை கொங்கையிற் பருமனை
தோப்புரு முலையினளைத் துயர்ச்சியா யணைவனென்றே.

என்றதோர் கிரகந்தன்னி லிருவர்க ளொன்றுகூடி
குன்றெனுமானைக்கோடு கொங்கைமின்மங்கையென்னும்
நன்றெனு மதிபோலுள்ள நாரியர் தன்னைச்சேர்வன்
என்றறி விறைதப்பாது யிதுவிதி வசமாங்காணே. கரு

சந்திரருடனேசெவ்வாய் தனித்தவர்க்கைந்துநிற்கில்
தந்திரன்கேதுராகு தனித்தவர்பகைத்திட்டாலும்
சந்திரமங்கைமாதா துவர்ச்சையால்சிவனார்தம்
அந்திரங்காலகேஷபம் அன்னவஸ்திரத்துக்காளான். கஎ

இதுவுமது - வேறு,

பொல்லாதகோளகனும் கேதுங்கூடி
பொருந்தியலக்கினத்தைத் திருந்தப்பார்க்கில்
இல்லாண்மையுள்ளவனாய் மல்லேபோடு
யெடுத்துண்பா னின்னதிசை விட்டகன்றகாலம்
சல்லாப சற்குணவா னாகவேதான்
சாம்பிராச்சிய யோகமதைச் சார்வில்லாமல்
வல்லாளன் சாதகர்க் கிருந்தவீட்டில்
வாசலிலே யானைகட்டி வாழ்வன்மெய்யே. கஅ

மெய்யாக லக்கினத்திற் பொய்யன்கூடி
விரும்பியே கேதுபுந்தி யெவனொன்பார்க்கில்
பொய்யாமல் சாதகன்மரண முடிவினாலே
பொசிப்பதிலே நாவிகஞ்சு பொசித்துமாள்வன்
செப்பான்சென்ன லக்கினதியாகில்
செட்டையதாய்க் கயறுகொண்டு மோட்டில்மாட்டி
வெய்யானேன் கழுத்ததிலே யிறுகிண்டிபாய்யோ
வேந்தர்விதி யால்மரண மிருனன்காமே. கக

தீர்க்கமாய் ராகுகேது நிருந்தவே லக்கினத்தை
பார்க்கவே செவ்வாய்லக்கி னதிப னுடனேசேரில்
மூர்க்கமாம் சாதகர்க்கு மூவாறு வயதுதன்னில்
ஏர்க்கவே சாபத்தாலே யெடுத்திடும் வினேயேபேசே. உ

பேசியிந்தப் படியிரண்டு பேருடன் குருவுஞ்சேரில்
ராசியின் முகதமனே லக்கினதிபன் பிலவானகில்
சிசிந்துமரணநோய்திர்ப்பன் சோசியம்கணிப்பனல்லால்
மாசிந்தவிடங்களெல்லா மரணமுந் தவிர்ப்பனன்றே. உக

நன்றெனலக்கினதி தன்னுடன்கணக்கனேறி
நின்றவர்குளிகன்தன்னே செறிபதாய்ப்பகைப்பனகில்
மனதினிற்பேய்னாயாலே மரணமென்றுரைக்கலாகும்
என்றதிற்செவ்வாய்கூடி லெடுத்திடுஞ்சன்னிதோஷம். ()

வல்லவனும்கேதுடனே செவ்வாய்கூடில்
 வருந்திய லக்கினத்தைப் பொருந்திப்பார்க்கில்
நல்லவனு மவர்திசைவிட் டேகுங்காலம்
 நல்மானந்திடுதைப லெடுக்கும்யோகம்
மெல்லவர்க்கும்பிரியமுள்ள கீர்த்திமானு
 மெழில்வணிபங்கிருட்சிபல வித்தைகற்பன்
சொல்லவனே இதுமிசம்பொய் யில்லைபாரு
 சோசியத்தின் னிர்ணயஞ்சொல் தவறிடாதே. உங

கூடியுடைய கேதுடனே ராகுசெவ்வாய்
 துணைபாக மூவருமே யிணையாய்ப்பார்கிற்
படியுடைய சாதகர்க்கு மிடியினாலே
 பார்தனிலே மரணமெனப் பகரலாகும்
குடியுடையோன் தன்னுடனே குருதானிற்கில்
 குணதோஷ மில்லையிடி குடியில்வீழும்
வடிவுடைய சாதகர்க்கு விதிதானென்று
 வழுத்துமுறை யிவ்வகையின் வகைகீபேசே. உச

குருவுடன்கதிரோனுதி குணமுடன்மூன்றுபேரும்
ஒருபதிதன்னிலேறி லக்கினதிடனைப்பார்க்கில்
உரவெனப்பிறந்தநாளாய் புபத்திரம்யாதொன்றில்லை
தெருவிலேயெரிந்துப்போட்ட தில்லையாக்தேடிப்பாரே. ()

பொய்யவன் றன்னுடனே கதிரோன்சேர்ந்து
பொன்னவனைத் தான்பகைத்து யிருப்பானாகில்
வெய்யவனும் லக்கினத்திற் சேர்ந்தேயிற்கில்
வேணவஷ்ட வயிஸ்வரிய மிருந்திட்டாலும்
செய்யவன்தன் பொசிப்பதுவே ஞப்தீண்டாது
செய்கையெனப்பொசிப்பெடுப்பன் செய்யுள்மார்க்கம்
வையகத்தி லிரவலன்போ லாடையில்லான்
வார்த்தைலட்சம் பொன்பெறவே வாழுவானே. உசு

திங்களுக்குடையோன்பன் னிரண்டிலிற்றீர்க்கமாக
சிங்கலக்கினத்தைநோக்கி பார்த்திட்டதேசமெய்க்க
மங்களமேழூது வாத்தியங்களவர் வீச
வங்கம்போல்வெள்ளையானைக்குடையுடனிருந்துவ்பானே.

லக்கினத்துக் கிருணன்கில் செவ்வாயோடு
லக்கினத்தைத் தான்பகைக்கு குளிசன்சேரிற்
பக்குவமா மவன்வபதி லெருமைதேசி
பருவமென்று வனுபோகந் திறந்தப்பாமல்
சுக்கிரனு மிவருடனே சேர்ந்தேபார்க்கிற்
சுபகோலப பஞ்சிதனைச் சுகமாகச்சேர்வன்
விக்கினங்க ளில்லையிது நிசம்பொய்யல்ல
விரும்பியதோர் சாதகர்க்கிவ் விபரம்பேசே. உஅ

திங்கள்ரவி யிருவருமே யொன்றாய்க்கூடி
திறமாக லக்கினத்தை நோக்கிப்பார்க்கில்
சங்கைகெட சக்கிலிச்சி தன்னைச்சேர்வன்
சண்டாள லக்கினத்தில் குருவேயிற்கில்
மங்களமாம் பிரமகோத் திரத்திலுள்ள
மங்கைதனைச் சேர்ந்துபொசித் திருந்துவாழ்வன்
வங்கணமாம் பிறதேசங் கொண்டேசென்று
வைபகத்தி லவன்பொருட்டால் வாழ்வல்லான். உசு

மைந்தன் தன்னுடனோராறு மதியுடன்மூன்றுபேரும்
எந்திடத்திருந்திட்டாலும்எதுகத்தோர்பார்வைவீட்டில்
அந்தகன்வெள்ளிபார்க்கி லானசாதகர்க்கென்றாலும்
சுந்தரமனையாள்நேத்ரஞ் சூட்சமாமதுடந்தன்னில்
சித்தனையானபெண்டு மருகனுக்கிபவமென்றே. கூ0

என்றயிக்கிரகத்தோடு வியல்புள்ளகுருவுங்கூடி
நின்றுலக்கினத்தைப்பார்க்கில் நேரிழைபுருடன்செல்வன்
நன்றெனவழைத்துச்சொல்வன் நலமெனவாழ்வதெல்லா
மன்றிலில்ராகுகேதாய் வழுத்தலாம்நிசமாமெய்யே. கூக

அஷ்டமாநலனுமொன்ப தாமடந்தன்னில்நன்றாய்
திட்டமாய்சுவரோடேகி லக்கினதிபனைப்பார்க்கில்
துஷ்டனாஞ்சாதகர்க்குத் தூக்கனுமவன்கைபோலே
கஷ்டமாம்வயதிரெட்டில் கடியதோர்மரணஞ்சொல்லே. ()

இந்துகதிரிருவருமே லக்கினத்தில்
இன்பமுடன் சுக்கிரனை நோக்கிப்பார்க்கில்
பந்துசெனந் தன்னைவிட்டுப் பிறதேசத்தில்
பாரியவள் பிறந்திடத்தே யிருந்துவாழ்வன்
சந்திரனுங் கேதுமொன்றாய்ப் பொருந்திநிற்கில்
தன்னினத்தை விட்டகன்று மதமேதப்பி
புந்தியெனும் வபர்வளர்த்துச் சிவனார்த்தம்
உகந்துசெய்வான் மதசாரந் தப்புவானே. கூ௬

பொல்லாத கேதுவுடன் குருவுஞ்சேர்ந்து
பொருந்தியே லக்கினத்தை திருந்தப்பார்க்கில்
வல்லாளன் கன்னக்கோல் கையுங்கள்ளன்
வானுமதி லக்கினத்தில் சேர்ந்தேநிற்கில்
நல்லாத வூமையென்று சொல்லலாகுங்
கனக்கவன் லக்கினத்தா யிணக்கமாகில்
உல்லாசன் சாதகர்க்குந் தேசபாஷை
வுரைப்பதுவேயெழுத்துமிக முரைப்போனுண்மை

திங்கள்ரவி யிருவருமே லக்கினத்தில்
திறமுடனே நின்றுநன்றாய் நவகோணத்தில்
பொங்கமுள்ள குருகணக்க னிருவர்தன்னைப்
புகழ்ந்துநன்றாய்ப் பார்த்திடில் சாதகன்பிதாவை

சங்கையுடன் வீட்டைகன்று ஒருவனுக்கே
 சடமில்லை யானதுபோ லந்தபுத்திரன்
பங்கமது செய்குளிகன் லக்கினத்திற்
 பகைத்துநிற்கில் பெத்தவர்க்கு முதவமாட்டான். ()

நல்லவனுஞ் செவ்வாயு மொன்றாய்க்கூடி
 நாலாறி லெட்டுமிந்த மூன்றுவீட்டில்
செல்லவனை லக்கினத்திற் குளிகன்புந்தி
 சேர்ந்துநன்றாய்ப் பார்த்திடவே செல்வன்தானும்
வெல்லவன்றன் றிசைவிடு தியானகாலம்
 வேண்டியதோர் பொருளழித்து களஸ்திரத்திறைவு
மில்லறமே தானிழந்து விசனத்தாலே
 யின்பமுடன் காஷாய மன்பாய்க்கொள்வன். ௩௬

சென்மமதிற் சனியிருந்து நாலாறெட்டில்
 செவ்வாயைத் தான்பார்க்கில் செகமேமெய்க்க
மின்மையிலே வகண்டசாம் பிராச்சியயோக
 மெழுநான்கு வயதுவிட்டு யோர்க்குங்காலம்
சின்மயமாம் சிவயோகம் யோகநிஷ்டை
 செய்யவல்லான் சிவசொத்துக் கதிகனல்லான்
நின்மயமே நிசமிது தப்பாதென்றும்
 நிம்மதிவாய் சாதகர்க்கு மின்னங்கேளே. ௩௭

கேளுநீ செவ்வாயில் குருதான்சேர்ந்து
கேதுமே லக்கினத்தி லிருப்பானாகில்
ஆளுமே லவிவிலகித் தவவேடத்துக்
குடையவனாய்க் கிரிதன்னிற் சென்றுகந்துவாசம்
ஆளுமே யில்லாத குகைக்குள்சே
மடங்கியிருந் தேகற்ப மருந்தவல்லான்
காளுமே வெகுகால மிருப்பானென்று
காட்டிடுவாய் சாதகர்க்கு நான்முகனார்விதியே. ௩௮

விதியான லக்கினத்தில் குருவுங்கேதும்
விரும்பியிந்த வறுனன்கில் ஏழில்நன்றாய்
மதியோனுங் கணக்கனுமே வொன்றாய்ச்சேர்ந்து
மருவியே லக்கினத்தைப் பார்ப்பானாகில்
கதிரோனுக் குடையபகலை போலேவுள்ளக்
களத்திர காறங்கள் ஏழுமொன்றாய்
சதிராக வைத்தினைக்க மாகவாழ்வன்
சத்தியமாங் குருவினுட சாட்சிதானே. ௩௯

தானிக்கட்படியேமூன்றுந் தாபரந்தனிலேவொன்றிற்
பானுவுங்கூடிலக்கி னதிபன்றன்னைப்பார்க்கில்
சேனவன்பணியலேவா தேவியன்கொடுக்கல்வாங்கல்
ஆனவன்லட்சங்கோடி திரவியத்ததிகமாவன். ௪0

